


…ணி சாஸ் 15.

# ஆதித்யஹ்ருதய ஸ்தோத்திரம்.

கல்லிடைக்குறிச்சி
ஸ்ரீமச்சந்திரபுரம் பண்டித சிரோமணி
எல். காசிவிஸ்வநாத சாஸ்திரிகளால்,
மொழிபெயர்க்கப்பட்டது.

---

ஜெனரல் டிரேடிங் கம்பெனி,
…ப்ட்ஸ் ரோட்,
…, மதராஸ்.

[அணா 2.

பாணி சீரீஸ் 15.

# ஆதித்யஹ்ருதய ஸ்தோத்திரம்.



கல்லிடைக்குறிச்சி
ஸ்ரீமச்சந்திரபுரம் பண்டித சிரோமணி
எல். காசிவிஸ்வநாத சாஸ்திரிகளால்,
மொழிபெயர்க்கப்பட்டது.

---

ஜெனரல் டிரேடிங் கம்பெனி,
565, பைகிராப்ட்ஸ் ரோட்,
திருவல்லிக்கேணி, மதராஸ்.

 [அணா 2.

## " ஆதித்யஹ்ருதய ஸ்தோத்திரம் "



அஸ்ய ஸ்ரீ ஆதித்யஹ்ருதய ஸ்தோத்ர மஹாமந்த்ரஸ்ய அகஸ்த்யோ பகவான் ருஷி:।

அனுஷ்டுப்ச்சந்த ః ।

ஸ்ரீ ஸூர்யநாராயணோதேவதா ॥

நிரஸ்தாஶேஷவிக்னதயா ஸர்வத்ர ஜய ஸித்யர்த்தே, வினியோகః॥

" த்யானம் "

ஜயதி ஜயதி சூர்யஸ் ஸப்தலோகைகதீபః கிரணம் ருதிததாபః ஸர்வதுக்கஸ்ய ஹர்தா ।

அருணகிரணகம்யஸ் சாதிராதித்யமூர்த்திః பரமபரம திவ்யః பாஸ்கரஸ்தம் நமாமி ॥

(பதவுரை) ஸப்தலோகைகதீபః = ஏழு உலகங்களுக்கு முக்கிய தீபம் போன்றவரும்

கிரணம்ருதிததாப: = கிரணங்களால் போக்கடிக்கப்பட்ட தாபத்தை உடையவரும், ஸர்வதுக்கஸ்ய = எல்லாவித துக்கத்தை, ஹர்தா = போக்கடிப்பவரும், அருண கிரண கம்ய: = அருணனுடைய கிரணங்களால் அறியக்கூடியவரும், ஆதி := முதன்மையானவரும், பரம பரமதிவ்ய: = ரொம்ப மிகவும் பிரகாசிக்கிறவரும், பாஸ்கர: = ஒளியை பரவசெய்கிறவருமான, ஸூர்ய: = யாதொரு சூர்யன், ஆதித்யமூர்த்தி: = சூர்யநாராயண மூர்த்தியாக, ஜயதி ஜயதி = விளங்குகிறாரோ, தம் = அந்த பகவானை, நமாமி= நமஸ்காரம் செய்கிறேன்.

ததோ யுத்த பரிஶ்ராந்தம் ஸமரே சிந்தயா ஸ்த்திதம் ,
ராவணம் சாக்ரதோத்ருஷ்ட்வா யுத்தாய ஸமுபஸ்த்திதம் ॥

ஷ்தைவதைஸ்ச ஸமாகம்ய த்ரஷ்டு மப்யா
கதோரணம் ।

உபகம்யாப்ரவீத் ராமம் அகஸ்த்யோ பக
வான், ரிஷி:॥

(ப - ரை) *தத: = பிறகு, ரணம் = யுத்தத்தை, த்ரஷ்டும் = பார்ப்பதற்கு, தைவதைஸ்ச = தேவதைகளோடு, ஸமா கம்ய = சேர்ந்து, அப்யாகத: = வந்த, பக வான் = ஷாட்குண்ய பரிபூர்ணரான, அகஸ் த்ய: = அகஸ்திய னென்ற, ரிஷி: = முனிவர், யுத்தபரிஸ்ராந்தம் = யுத்தத்தில் களைப் படைந்தவனையும், யுத்தாய = யுத்தம் செய்வ தற்காக, அக்ரத: = முன்னே, ஸமுபஸ்த்தி தம் = ஸமீபத்தில் இருக்கிறவனுமான, ராவ ணம் ச = ராவணனையும், ஸமரே = யுத்தத் தில், சிந்தயா = கவலையுடன், ஸ்த்திதம் =*

இருக்கிற, ர்ரமம் = ராமரையும் த்ருஷ்ட்வா = பார்த்து, உபகம்ய = அடைந்து, அப்ரவீத் = சொன்னர்.

(தாத்பர்யம்.) ராமரும் ராவணனும் ஓயாமல் யுத்தம் செய்ததால் இராவணன் சிறிது இளைப்படைந்து, சிரமபரிஹாரஞ் செய்து மறுபடியும் யுத்தம் செய்யவந்த ராவணனையும், பலிஷ்டனை ராணவனை எப்படி ஸம்ஹரிப்பது என்று கவலையுடனிருக்கிற ராமரையும் அகஸ்தியர் சமஸ்த தேவதைகளுடன் பார்த்து, ராவணனை இப்போதே ஜயிக்கப்போகிருய் கவலைப்படாதே, உன்வீர்யம் விருத்தி அடைவதற்காக ஆதித்யஹ்ருதய ஸ்தோத்திரத்தினல் சூரியபகவானை உபாஸிக்கவு மென்று எண்ணங்கொண்டு ராமரை அணுகி இவ்விதம் சொன்னர்.

ராம ராம மஹாபாஹோ ஶ்ருணு குஹ்யம் ஸநாதனம் ।

யேந ஸர்வாநரீந் வத்ஸ ஸமரே விஜ
யிஷ்யஸி ॥

(ப - ரை) மஹாபாஹோ = நீண்ட கைகளையுடையவனே, வத்ஸ = குழந்தாய், ராம ராம = ஹேராம, ஹேராம, யேந = எதினால், ஸமரே = யுத்தத்தில், ஸர்வானரீன் = எல்லா சத்ருக்களை, விஜயிஷ்யஸி = ஜயிப்பாயோ, ஸ நா த ன ம் = புராதனமான (அப்பேர்க்கொத்த) குஹ்யம் = ரஹஸ்யத்தை, ஶ்ருணு = கேள்.

(தா - ம்) நீண்ட கைகளை உடைய ஏ ராம, ஓ குழந்தாய் நீ எதினால் எல்லா சத்ருக்களையும் வெல்லுவாயோ அப்பேர்க்கொத்த மிகவும் பழைமையான ரஹஸ்யத்தை சொல்லுகிறேன் அதை கேள்.

ஆதித்யஹ்ருதயத்தின் பெருமையை இரண்டு சுலோகங்களால் கூறுகிறார்-

ஆதித்யஹ்ருதயம் புண்யம் ஸர்வஶத்ரு
விநாஶனம் ।
ஜயாவஹம் ஜபேந் நித்யம் அக்ஷய்யம்
பரமம் ஶிவம்
ஸர்வமங்கள மாங்கள்யம் ஸர்வபாப
ப்ரணாஶநம் ।
சிந்தாஶோக ப்ரஶமனம் ஆயுர் வர்த்தன
முத்தமம்॥

(ப - ரை.) புண்யம் = புண்யத்தை உண்டு பண்ணுகிறதும், ஸர்வஶத்ருவிநாஶனம் = எல்லா சத்துருக்களை நாசம் செய்கின்றதும், ஜயாவஹம் = ஜயத்தை அளிக்கின்றதும், நித்யம் = எப்பொழுதும், அக்ஷய்யம் = அழிவில்லாததும், பரமம் = சிரேஷ்டமானதும், ஶிவம் = மங்களகரமானதும், ஸர்வமங்கள மாங்கள்யம் = எல்லாமங்கள வஸ்துக்களுக்கும் மங்களம்போன்

றதும், ஸர்வபாபப்ரணாஸனம் = எல்லாவித பாபங்களை தொலைக்கின்றதும், சிந்தாஸோ கப்ரஸமனம் = மனக்கவலையை நீக்குகின்ற தும், ஆயுர்வர்த்தனம் = ஆயுளை விருத்தி பண்ணுகிறதும், உத்தமம் = மேன்மையா னதுமான, ஆதித்யஹ்ருதயம் = சூரியனு டைய மனதை திருப்திசெய்கின்ற, ஆதித் யஹ்ருதய ஸ்தோத்திரத்தை, ஜபேத் = ஜபிக் கவேண்டும் "ஆதித்யஹ்ருதயமென்பதின் பொருள். ஆதித்ய - சூரிய மண்டலத்தி னுடைய, ஹ்ருதயம் - மத்தியிலிருக்கிற பர மாத்மா அல்லது ஆதித்ய - சூரியனுடைய, ஹ்ருதயம் - மனஸை திருப்தி செய்விக்கின்ற ஸ்தோத்திரம்."

**(தா - ம்)** ஓராமா, ஆதித்யஹருதய மென்ற ஸ்தோத்திரத்தை நீ ஜபிக்கவேண்டும், அது ஜபிக்கிறவர்களின் பாபங்களை அகற்றி மனிதனை புனிதமாக செய்கின்றது, எல்லா சத்துருக்களை

வெல்லும்படி செய்யும், ஜயத்தையும் கொடுக்கும், ஒருநாளும் அழிவில்லாமல் மிகவும் மங்களத்தை அளிக்கும், எல்லா மங்கள வஸ்துக்களுக்கும் மங்களமாயுள்ளதும், எல்லாவித பாபங்களையும் நசிக்கும்படி செய்யும், மனக்கவலையை நீக்கும், தீர்க்காயுளை கொடுக்கும், எல்லாவித ஸ்தோத்திரங்களை காட்டிலும் மிகவும் சிறந்தது. ஆகையால் நீ அந்த ஸ்தோத்திரத்தை ஜபிக்கவும்.

ஆதித்யனை குறித்து ஸ்தோத்திரம் செய்கிறார்.

ரஶ்மிமந்தம் ஸமுத்யந்தம் தேவாஸுர
நமஸ்க்ருதம் ।
பூஜயஸ்வ விவஸ்வந்தம் பாஸ்கரம் புவ
னேஶ்வரம் ॥

(ப - ரை) ரஶ்மிமந்தம் = ஞானரூபமாயும் பிரகாசரூபமாயுள்ள கிரணங்களை உடை

யவரும், ஸமுத்யந்தம் = புதுபுதிதாய் உதிக்கிறவர்போன்றவரும், ஸ்ருஷ்டி முதலியவைகளில் முயற்சியுடையவரும், தேவாஸுர நமஸ்க்ருதம் = தேவர்களாலும் அஸுரர்களாலும் நமஸ்கரிக்கப்பட்டவரும், விவஸ்வந்தம் = எப்போதும் விவஸு என்ற மணியை தரிக்கிறவரும் அல்லது தனது காந்தியால் மற்றவைகளை மறைப்பவனும், பாஸ்கரம் = காந்தியை பரவசெய்கிறவனும், புவனேஶ்வரம் = உலகத்துக்கு ஈஸ்வரருமான (சூர்யனை) பூஜயஸ்வ = பூஜை செய்.

(தா - ம்) பஞ்சேந்திரியங்கள் மூலமாய் அனேகக ஞானரஶ்மி உடையவரும், தங்கநிறமுள்ள கிரணங்களை உடையவரும், தான் உதித்து அவரவர்களின் கர்மாக்களை செய்ய தூண்டுகிறவரும், ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹாரங்களில் முயற்சி செய்கின்றவரும், தேவர்களாலும் அஸுரர்களாலும் நமஸ்கரிக்கப்பட்டவரும், எப்போதும்

விவஸு என்ற ஓர் மணிவிசேஷத்தை தரிக்கிற வரும், தனது ஒளியால் எல்லா ஒளியை மறைக் கும்படி செய்பவரும் பதார்த்தங்களின் ஸ்வரூபத் தை தெரிவிக்க தனது ஒளியை பரவசெய்கிற வரும், தனது கிரணங்கள் மூலமாய் மழையைவர் ஷித்து உலகத்தை காப்பாற்றுகிறவருமான சூரியனே பூஜிக்கவும்.

எல்லா தேவதைகளைக்காட்டிலும் மேலான வரென்பதை நிரூபிக்கிருர்.

ஸர்வதேவாத்மகோ ஹ்யேஷ தேஜஸ்வீ
ரஸ்மிபாவநः।
ஏஷ தேவாஸுரகணாந் லோகாந் பாதி
கபஸ்திபிः॥

(ப - ரை) ஏஷः = இந்த சூரியபகவான், சூரிய மண்டலத்திலிருக்கும் பரமாத்மா, ஸர்வதேவாத்மகः = ஸமஸ்த தேவதைகளின் ஆத்மஸ்வரூபமுள்ளவர், தேஜஸ்வீ = அதிக

தேஜஸ்ஸுடையவர், ரஶ்மிபாவனः = தனது கிரணங்களால் சிலாகிக்க தகுந்தவர் அல்லது ஞானரஶ்மியால் யோகிகளை பிரும்மலோகத்தை அடையும்படி செய்கிறவர், தேவாஸுரகணாந் = தேவாஸுர கூட்டங்களையும், லோகான் = எல்லா உலகங்களையும், கபஸ்திபிः = கிரணங்களால், பாதி = ரக்ஷிக்கிறார்.

(தா - ம்) இந்த சூரியபகவான் ஸமஸ்த தேவதாஸ்வரூபி, எல்லா வஸ்துக்களை விளக்கக் கூடிய அதிக ஒளியை உடையவர். தனது கிரணங்களால் சிலாகிக்க தகுந்தவர். தேவலோகம் முதலிய எல்லா உலகத்தையும் தனது கிரணங்களால் காப்பாற்றுகிறார். அதாவது, சூரியனை குறித்து அக்னியில் ஹோமம் செய்வது சூரியனை அடைகிறது. சூரியனிடமிருந்து மழை உண்டாகிறது, மழையால் தான்யம் முதலியவைகள் உண்டாகின்றன. புரோடாசம் முதலியவைகளால் தேவர்கள் முதலிய எல்லா ஜனங்களும் காப்

பாற்றப்படுகிறார்கள் அல்லது தனது கிரணங்களால் ஜலத்தை இழுத்து மேகமாக்கி வர்ஷித்து பயிர் உண்டாக்கி அதினால் ஜனங்களை காப்பாற்றுகிறார் என்பது அதின் கருத்து.

இவ்விதம், இந்த சூரியநாராயணரும், எல்லா தேவதாஸ்வரூபி. இவர் தனது கொஞ்சம் தேஜஸினால் எல்லாவற்றையும் விளங்க செய்கிறவர். ஞானரஸ்மியால் யோகிகளை பிரும்மலோகத்தை அடையும்படி செய்கிறவர். எல்லா உலகத்தையும் ரக்ஷிக்கிறவர்.

சமஸ்த தேவதைகளுக்கும் இவரே அந்தராத்மா என்பதை நிரூபிக்கிறார்—

ஏஷ ப்ரம்ஹாச விஷ்ணுஶ்ச ஶிவஸ்
ஸ்கந்த: ப்ராஜாபதி:|
மஹேந்த்ரோ, தனத:, காலோ, யமஸ்,
ஸோமோ ஹ்யபாம்பதி:||

(ப - ரை) ஏஷ: = இவர், ப்ரம்ஹாச = பிரும்மாவாகவும், விஷ்ணுஶ்ச = விஷ்ணுவாகவும், ஶிவ: = சிவனுகவும், ஸ்கந்த: = சுப்பிரமணியாகவும், ப்ரஜாபதி: = நவப்ரஜாபதியாகவும், மஹேந்த்ர: = தேவேந்திரனுகவும், தனத: = குபேரனுகவும், கால: = ம்ருத்யுவாகவும், யம: = யமனுகவும், ஸோம:= சந்திரனுகவும், அபாம்பதி: = ஜலத்திற்கு அதிபதியான வருணனுகவும்.

பிதரோ வஸவஸ் ஸாத்யா ஹ்யஶ்வி
னௌ மருதோ மனு:।
வாயுர் வன்ஹி: ப்ரஜாப்ராண ருதுகர்தா
ப்ரபாகர:॥

(ப - ரை) பிதர: = அக்னிஷ்வாத்தாதிகளான பித்ருக்களாகவும், வஸவ: = அஷ்டவசுக்களாகவும், ஸாத்யா:=ஸாத்யர்களென்ற தேவவிசேஷங்களாகவும், அஶ்வினௌ =

அசுவினீ தேவதைகளாகவும், மருதः = மருத் கணங்களாகவும், மனுः = மனுசக்ரவர்த்தியாகவும், வஹ்னிः = அக்கினியாகவும், ப்ரஜாப்ராணः = பிராணிகளின் ப்ராணவாயுவாகவும், ருதுகர்த்தா = வஸந்தம் முதலிய ஆறு ருதுக்களை உண்டுபண்ணுகிறவராகவும், ப்ரபாகரः = சூரியனுகவும் (ஆகிறுர்).

(தா - ம்) இவரே, பிரும்மாவாகவும், விஷ்ணுவாகவும், சிவனுகவும், சுப்ரமண்யராகவும், நவப்ரஜாபதிகளாகவும், இந்திரனுகவும், குபேரனுகவும், ம்ருத்யுவாகவும், யமனுகவும், சந்திரனுகவும், வருணனுகவும், பித்ருக்களாகவும், அஷ்டவஸுக்களாகவும், ஸாத்யர்களாகவும், அசுவினி தேவதைகளாகவும், மருத்கணங்களாகவும், மனுசக்ரவர்த்தியாகவும், அக்கினியாகவும், பிராணிகளின் பிராணவாயுவாகவும்; ஆறு ருதுக்களை உண்டுபண்ணுகிறவராகவும், சூரியனுகவும் ஆகி

ரூர். இவரே எல்லாவர்களுக்கும் அந்தராத்மாவாக உள்ளவர்.

இப்போது ஆதித்யஹ்ருதயமென்ற ஸ்தோத்திரத்தை உபதேசிக்கிறார்.

ஆதித்ய: ஸவிதா ஸூர்ய: கக: பூஷா
கபஸ்திமான் ।
ஸுவர்ணஸத்ருஶோ பானுர் ஹிரண்ய
ரேதா, திவாகர:॥

(ப - ரை) ஆதித்ய: = அதிதியின் புத்ரன், ஸவிதா = ஜனங்களை படைக்கிறவர், ஸூர்ய: = அவரவர்களின் கர்மாக்களை செய்விப்பிக்கிறவர், கக: = ஆகாயத்தில் சஞ்சரிப்பவர், பூஷா = உலகங்களை போஷிப்பவர், கபஸ்திமான் = கிரணங்களை உடையவர், ஸுவர்ணஸத்ருஶ: = சுவர்ணத்துக்கு சமானமான வர்ணமுடையவர், பானு: = எங்கும் பிரகாசிக்கிறவர், ஹிரண்யரேதா: = தங்க

மயமான பிரும்மாண்டத்தை படைக்கிறவர், திவாகரஃ = பகலில் ஜனங்களை காரியத்தில் செய்விக்கிறவர், அறிவை உண்டுபண்ணுகிற வர்.

ஹரிதஶ்வஸ் ஸஹஸ்ரார்சிஃ ஸப்தஸப்திர் மரீசிமான் ।
திமிரோந்மதனஶ் ஶம்புஸ் த்வஷ்டா மார் தாண்ட அம்ஶுமான் ॥

(ப-ரை) ஹரிதஶ்வஃ = திக்குகளில் எங் கும் வியாபிக்கிறவர் அல்லது பச்சை குதி ரையை உடையவர், ஸஹஸ்ரார்சிஃ = ஆயி ரங்கிரணங்களை உடையவர், ஸப்தஸப்திஃ = ஸப்தயென்னும் குதிரையை உடையவர், மரீசிமான் = வெகு ஒளியையுடைய கிரணங் களை யுடையவர் அல்லது சத்ருக்களை வெல் லும் சக்ராயுத முடையவர், ஶம்புஃ = சுகத் தை அளிக்கிறவர், த்வஷ்டா = எல்லாவற்றை

யு மழிப்பவர், மார்த்தாண்டஃ = எல்லாவற்றையும் ஸம்ஹரித்த பிறகு உலகங்களை படைக்க மறுபடியும் உண்டாக்குகிறவர்; அம்ஶுமான் = எங்கும் வியாபிக்கும் ஒளி உடையவர்.

ஹிரண்யகர்பஶ் ஶிஶிரஸ் தபனோ பாஸ்
கரோ ரவிஃ|
அக்னிகர்போ திதேஃ புத்ரஶ் ஶங்க்கஸ்
ஶிஶிரநாஶநஃ||

(ப - ரை) ஹிரண்யகர்பஃ = சுவர்ணமயமான பிரும்மாண்டத்திலிருப்பவர் அல்லது எல்லா உலகங்களின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் செய்கிறவர், ஶிஶிரஃ = குளிர்ந்தவர் அதாவது சுகசுவபாவத்தைஉடையவர், தபனஃ = தபிக்கசெய்கிறவர் அல்லது சுவயமாகவே ஐசுவரியமுடையவர், பாஸ்கரஃ = ஒளியை பரவசெய்கிறவர், ரவிஃ = ஸ்தோத்

திரம் செய்யப்படுகிறவர், அக்னிகர்ப: = பகலில் அக்னியை மத்தியிலுடையவர், அதிதே: புத்ர: = அதிதியின் புதல்வர், ஶங்க்க: = தானாகவே ஶமனமடைகிறவர் அல்லது பரமானந்தஸ்வரூபியும் ஆகாயம் போல் எங்கும் வியாபிக்கிறவர், ஶிஶிரநா ஶந: = பனியை நாசஞ்செய்கிறவர்.

வ்யோமநாதஸ் தமோபேதீ ருக்யஜுஸ்
ஸாமபாரக: ।
கனவ்ருஷ்டி ரபாம்மித்ரோ விந்த்யவீதீப்ல
வங்கம: ॥

(ப - உ.ர) வ்யோமநாத: = ஆகாயத்தை படைத்தவர், ஆகாயத்துக்கரசன், தமோ பேதீ = இருளை போக்கடிக்கிறவர் அல்லது பக்தர்களின் அஞானத்தை விலக்குகிறவர், ருக்யஜுஸ்ஸாமபாரக: = ருக்வேதம், யஜுர் வேதம், ஸாமவேதம் இவைகளின் கரையை

யடைந்தவர், கனவ்ருஷ்டிஃ = அதிக மழை யை பெய்யும்படி செய்பவர், அபாம்மித்ரஃ = ஜலங்களுக்கு மித்ரர் அல்லது சமுத்திரத் தில் சயனிக்கிறவர், விந்த்யவீதீ ப்லவங்கமஃ= (தக்ஷிணாயனத்தில்) விந்திய மலைவழியாய் செல்லுகிறவர்.

ஆதபீ மண்டலீ ம்ருத்யு: பிங்களஸ் ஸர்வ
தாபனஃ ।
கவிர் விஶ்வோ மஹாதேஜா ரக்தஸ்ஸர்வ
பவோத்பவஃ ॥

(ப - ரை) ஆதபீ = வெயிலை உடையவர், மண்டலீ = வட்டமான பிம்பத்தை உடை யவர், ம்ருத்யுஃ = விரோதிகளை வெல்லுகிற வர், பிங்களஃ = (உதயகாலத்தில்) பொன் நிறமுடையவர், ஸர்வதாபனஃ = எல்லாவற் றையும் தபிக்கசெய்கிறவர், கவிஃ = சாஸ்தி ரங்களை இயற்றியவர், விஶ்வஃ = தானே உல

கத்தை படைத்து உலகத்தினுள் புகுந்தவர், மஹாதேஜா: = அதிக தேஜஸ் உடையவர், ரக்த: = எல்லாவரிடத்திலும் அன்புள்ளவர், ஸர்வபவோத்பவ: = எல்லாவற்றின் உத்பத்திக்கு காரணமாயுள்ளவர்.

நக்ஷத்ரக்ரஹ தாராணும் அதிபோ விஶ்வபாவன: ।
தேஜஸாமபி தேஜஸ்வீ, த்வாதஶாத்மந் நமோஸ்து தே ॥

(ப - ரை) நக்ஷத்ர க்ரஹ, தாராணும் = அசுவினி முதலிய நக்ஷத்திரங்கள், நவக்கிரஹங்கள் சாதாரண நக்ஷத்திரங்கள் இவைகளுக்கு அதிப: = தலைவர், விஶ்வபாவன: = உலகத்தை ஸ்தாபிக்கிறவர், தேஜஸாமபி = அக்னி முதலிய தேஜஸ்களுக்குள், தேஜஸ்வீ = அதிக ஒளியுள்ளவர், த்வாதஶாத்மன் = பன்னிரெண்டு மூர்த்தி உடையவரே,=தே= உமக்கு, நம: = நமஸ்காரம், அஸ்து = இருக்கட்டும்.

10, 15. (தா - ம்) அதிதியின் புதல்வரும், ஜனங்களை படைக்கிறவரும், அவரவர்களின் கர்மாக்களை செய்விப்பிக்கிறவரும், ஜனங்களின் உபகாரத்திற்காக எப்போதும் ஆகாயத்தில் சஞ்சரிக்கிறவரும், கிரணங்கள் மூலமாய் ஜலத்தை இழுத்து மழையை பெய்யும்படிசெய்து உலகத்தை காப்பாற்றுகிறவரும், மேன்மையான கிரணங்களை உடையவரும், தங்கவர்ணமுடையவரும், எங்கும் பிரகாசிக்கிறவரும், பொன்மயமான பிரும்மாண்டத்தை படைக்குகிறவரும், பகலை உண்டாக்கி ஜனங்களை தன் தன் காரியங்களில் ஏவுகிறவரும் அல்லது அறிவை உண்டு பண்ணுகிறவரும், (11) திக்குகளில் எங்கும் வியாபிக்கிறவரும் ஆயிரங்கிரணங்களுடையவரும், ஸப்த என்றும் குதிரை உடையவரும், வெகு ஒளியையுடைய கிரணங்களை உடையவரும், சுகத்தை அளிப்பவரும், எல்லாவற்றையும் ஸம்ஹரிப்பவரும், ஸம்ஹரித்தபிறகு உலகத்தை உண்டாக்க

அதில் தோன்றுகிறவரும், எங்கும் வியாபிக்கும் ஒளியை யுடையவரும், (12) சுவர்ணமயமான பிரும்மாண்டத்தி லிருப்பவரும், எல்லா உலகத் தின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களை செய் கின்றவரும், தாபத்ரயத்தினல் தபிக்கிறவர்க ளின் தாபத்தை போக்கடித்து குளிரச்செய்கிற வரும், சுகசுவபாவமுடையவரும், எங்கும் ஒளி யை பறவச்செய்கிறவரும், அனைவராலும் ஸ்துதிக் கப்படுகிறவரும், பகலில் அக்னியை கர்பத்தி லுடையவரும், அதிதிக்கு புதல்வரும், சாயங்கா லத்தில் தானகவே மனமடைகிறவரும், பரமா னந்தஸ்வரூபியாயும், ஆகாயம்போல் எங்கும் வியா பிக்கிறவரும், பனியை போக்கடிக்கிறவரும், (13) ஆகாயத்திற்கு அரசனும், இருளை போக்கடிக்கிற வரும், பக்தர்களின் அஞ்ஞானத்தை விலக்குகிற வரும், ரிக், யஜுஸ், ஸாமம் இம்மூன்று வேதங் களின் கரையை அடைந்தவரும், அதிக மழையை பெய்யும்படி செய்கிறவரும், ஜலங்களுக்கு மித்ர ரும், தக்ஷிணயனத்தில் விந்திய மலைவழியாய்

செல்லுகிறவரும், (14) வெயிலை உடையவரும் வட்டமான பிம்பத்தை உடையவரும், விரோதிகளை வெல்லுகிறவரும், உதயகாலத்தில் பொன் நிறமுடையவரும், எல்லாவற்றையும் தபிக்க செய்கிறவரும், சாஸ்திரங்களை இயற்றியவரும், உலகத்தினுட்புகுந்தவரும், அதிக தேஜஸுடைய வரும், எல்லாவரிடத்திலும் அன்புள்ளவரும், எல்லாவற்றின் உற்பத்திக்கு காரணமாயுள்ளவரும், (15) அஸ்வினி முதலிய நக்ஷத்திரங்கள், நவக்ரஹங்கள், சாதாரண நக்ஷத்திரங்கள் இவைகளுக்கு தலைவராயிருப்பவரும், ரக்ஷிப்பதினால் உலகத்தை ஸ்தாபிப்பவரும், அக்னி முதலிய ஒளிகளுக்குள் அதிக ஒளியுள்ளவரும், பன்னிரெண்டு மூர்த்தியாயுமுள்ள உமக்கு அனேக நமஸ்காரம்.

நமஃ பூர்வாய கிரயே பஶ்சிமே கிரயே நமஃ
ஜ்யோதிர்கணானாம் பதயே தினாதிபதயே நமஃ ॥

(ப - ரை) பூர்வாய = கிழக்கு திக்கிலுள்ள, கிரயே = மலையிலிருக்கும் (உமக்கு), நம: = நமஸ்காரம், பஸ்சிமே = மேற்கு திக்கிலுள்ள கிரயே = மலையிலிருக்கும் (உமக்கு), நம: நமஸ்காரம், ஜ்யோதிர்கணனும் = ஒளிகளின் கூட்டங்களுக்கு, பதயே = தலைவராயும், தினுதிபதயே = பகலுக்கு அதிபதியுமான (உமக்கு), நம: = நமஸ்காரம்.

(தா - ம்) உதயபர்வதத்திலிருக்கும் உமக்கு நமஸ்காரம், அஸ்தமன பர்வதத்திலிருக்கும் உமக்கு நமஸ்காரம், ஒளிகளின் கூட்டங்களுக்கு அதிபதியான உமக்கு நமஸ்காரம், பகலுக்கு அதிபதியான உமக்கு நமஸ்காரம்.

ஜயாய ஜயபத்ராய ஹர்யஸ்வாய நமோ
நம:।
நமோநமஸ் ஸஹஸ்ராம்ஸோ ஆதித்யாய
நமோ நம:॥

(ப - ரை) ஜய்பாய = ஜயசீலரும், ஜயபத்ராய = ஜயம், மங்களம், இவைகளை கொடுப்பவரும், ஹர்யஶ்வாய = பச்சைக் குதிரையுடையவருமான (உமக்கு), நமோநமஃ = நமஸ்காரம், நமஸ்காரம், ஸஹஸ்ராம்ஶோ = ஆயிரங்கிரணங்களுடையவரே, ஆதித்யாய = அதிதியின் புதல்வரான (உமக்கு), நமோ நமஃ = நமஸ்காரம், நமஸ்காரம்.

(தா - ம்) ஜயசீலரும், ஜயம், மங்களம் இவைகளை கொடுப்பவரும், பச்சைக்குதிரையுடையவருமான உமக்கு நமஸ்காரம், நமஸ்காரம். ஆயிரம் கிரணங்களை உடைய, அதிதியின் புதல்வரான உமக்கு நமஸ்காரம், நமஸ்காரம்.

குறிப்பு :—இரண்டுதடவை நமஸ்காரம் சொல்வது தனது அதிக ஆதரவை காண்பிக்கிறது.

நம உக்ராய வீராய ஸாரங்காய நமோ நம: ||

நம: பத்மப்ரபோதாய மார்தாண்டாய நமோ நம: |

(ப - ரை) உக்ராய = பயங்கராராயும், வீராய=பராக்கிரமமுள்ளவருமான (உமக்கு) நம: = நமஸ்காரம், ஸாரங்காய = வெகுசீக்கிரம் செல்லுகிற அல்லது, காலசக்ரத்தை போகச் செய்கிற (உமக்கு) நமோ நம: = நமஸ்காரம், நமஸ்காரம், பத்மப்ரபோதாய = தாமரையை மலரச்செய்கிற (உமக்கு), நம: = நமஸ்காரம், மார்தாண்டாய = எல்லாவற்றையும் அழித்து மறுபடியும் உண்டுபண்ணுகின்ற (உமக்கு), நமோ நம: = நமஸ்காரம், நமஸ்காரம்.

(தா - ம்) தன்னை உபாசிக்காதவர்களுக்கு அதிக பயங்கரரும், பராக்கிரமமுள்ளவருமான உமக்கு நமஸ்காரம், (சூரியன் ஒரு அரை நிமிஷத்

தில் இரண்டாயிரம் யோஜனை மைல் போகிறு ரென்பது புராணம் கூறுகிறது) ஆகையால் வெகுவேகமாய் செல்லும் உமக்கு நமஸ்காரம், நமஸ்காரம், இரவில் தாமரை மூடிக்கொண்டி ருக்கும், பகலில் சூரியனுடைய வெளிச்சத்தை கண்டதும் தாமரை மலர்ந்துவிடும், தாமரையை மலரச்செய்கிற உமக்கு நமஸ்காரம், பிரளயகாலத் தில் உலகமனைவற்றையுமழித்து மறுபடியும் ஸ்ருஷ்டிக்கின்ற உமக்கு நமஸ்காரம், நமஸ்காரம்.

ப்ரும்ஹேஶாநாச்யுதேஶாய ஸூர்யாயா
தித்யவர்சஸே ।
பாஸ்வதே ஸர்வபக்ஷாய ரௌத்ராய வபு
ஷே நமஃ ॥

(ப - ரை) ப்ரும்ஹேஶாநாச்யுதேஶாய = பிரும்மா, சிவன், விஷ்ணு இவர்களுக்கு அதிபதியும், ஆதித்யவர்சஸே = ஆதித்யரூப மான ஒளியை உடையவரும், ஸூர்யாய =

ஜனங்களை காரியத்தில் ஏவுகிறவரும். பாஸ்வதே = ஒளியையுடையவரும், ஸர்வபக்ஷாய = அனைவற்றையும் ஸம்ஹரிப்பவரும் ஆகையால், ரௌத்ராய = அச்சமயத்தில் பயங்கரருமான, வபுஷே = சரீரமுடைய (உமக்கு), நம: = நமஸ்காரம்.

(தா - ம்) "அஸாவாதித்யோப்ரஹ்ம" என்றசுருதியால் சூரியனை பரப்பிரும்மமாக பாவித்து பிரும்ஹேஸாநாச்யுதேஸாய என்பதால் ஸ்து திக்கின்றார், பிரும்மா, சிவன், விஷ்ணு இவர்களுக்கும் தலைவரும், ஆதித்யரூபமான ஒளியையுடையவரும், ஜனங்களைத் தன் தன் கார்யத்தைசெய்வதில் ஏவுகிறவரும், மிகவும் ஒளியையுடையவரும், பிரளயத்தில் அனைவற்றையும் ஸம்ஹரிப்பவரும், அச்சமயத்தில் அதிக பயங்கரமான உருவம் கொண்டவருமான உமக்கு நமஸ்காரம்.

தமோக்னாய ஹிமக்னாய ஶத்ருக்னாயாமி தாத்மனே।

க்ருதக்னக்னய தேவாய ஜ்யோதிஷாம்
பதயேநம:||

(ப - ரை) தமோக்னய = இருளை போக்கடிப்பவரும், ஹிமக்னய = பனியை நசிக்க செய்பவரும், ஶத்ருக்னய = சத்துருக்களை வெல்லுகிறவரும், அமிதாத்மனே = அளவிட முடியாத மஹிமையை உடையவரும், க்ருதக்னக்னய=செய்த நன்றி மறந்தவனை கொல்லுகிறவரும், தேவாய = ஸ்வயம் பிரகாசிக்கிறவரும், ஜ்யோதிஷாம் = அக்னி முதலிய ஒளிகளுக்கு, பதயே=தலைவருமான (உமக்கு) நம: நமஸ்காரம்.

(தா - ம்) இருளை போக்கடிப்பவரும், பனியை நசிக்க செய்கிறவரும், சத்துருக்களை அழிப்பவரும், அளவிடமுடியாத மஹிமையை உடையவரும், செய்த நன்றிமறந்தவனை கொல்லுபவரும், தனது ஒளியால் பிரகாசிக்கிறவரும்,

அக்னி முதலிய எல்லா ஒளிகளுக்கும் தலைவரு மான உமக்கு நமஸ்காரம்.

தப்தசாமீகராபாய வஹ்நயே விஶ்வகர்மணே |
நமஸ் தமோபிநிக்னய ருசயே லோகஸாக்ஷிணே ||

(ப - ரை) தப்தசாமீகராபாய = உருக்கின சுவர்ணத்திற்கு சமானமான காந்தியை உடையவரும், வஹ்நயே = அக்னிஸ்வரூபியும், விஶ்வகர்மணே = உலகத்தை படைப்பவரும், தமோபிநிக்னய = இருளை போக்கடிப்பவரும் அல்லது அஞானத்தை விலக்குகிறவரும், ருசயே = பிரகாசிக்கிறவரும், லோகஸாக்ஷிணே = ஜனங்களின் கர்மங்களுக்கு ஸாக்ஷியாயுமுள்ள (உமக்கு), நமః = நமஸ்காரம்.

(தா - ம்) உருக்கின சுவர்ணத்திற்கு சமானமான காந்தியை உடையவரும், அக்கினி ரூபியாய் ஹவிசை வஹிக்கிறவரும், உலகத்தை படைப்பவரும், ஜனங்களின் அஞ்ஞானத்தை விலக்குகிறவரும், இருளை போக்கடிப்பவரும், தனது ஒளியால் பிரகாசிக்கிறவரும், ஜனங்களின் உட்புகுந்து அவர்களின் புண்யபாபங்களுக்கு ஸாக்ஷியாயிருப்பவருமான உமக்கு நமஸ்காரம்.

நாஶயத்யேஷ வை பூதம் ததேவ ஸ்ருஜதி
ப்ரபு: ।
பாயத்யேஷ தபத்யேஷ வர்ஷத்யேஷ கப
ஸ்திபி: ॥

(ப - ரை) ஏஷவை = இவரே, பூதம் = உலகத்தை, நாஶயதி = அழிக்கிறார். ப்ரபுரேவ =சகலபிரபஞ்சத்திற்கு நியாமகரான இவரே, மறுபடியும், தத் = அவ்வுலகத்தை, ஸ்ருஜதி = ஸ்ருஷ்டிக்கிறார். ஏஷ: = இவரே,

கபஸ்திபி: = கிரணங்களால், பாயதி = உலர்த்துகிருர். ஏஷ: = இவரே, தபதி = தபிக்க செய்கிருர். ஏஷ: = இவரே, வர்ஷதி = மழை பெய்யவும் செய்கிருர்.

(தா - ம்) ஸகலபிரபஞ்சத்திற்கு நியாமகரான இந்த பகவான் உலகத்தை அழிக்கிருர், மறுபடியும் ஸ்ருஷ்டிக்கிருர். தனது கிரணங்களால் உலர்த்துகிருர், தபிக்கவும் செய்கிருர், மழை பெய்யவும் செய்கிருர்.

ஏஷ ஸுப்தேஷு ஸர்வேஷு பூதேஷு
பரிநிஷ்ட்டித: ।
ஏஷ ஏவாக்னிஹோத்ரம் ச ப்பலம் சை
வாக்னிஹோத்ரிணும் ॥

(ப - ரை) ஏஷ: இந்த பகவான், ஸர்வேஷு = எல்லா, பூதேஷு = பிராணிகள், ஸுப்தேஷு = தூங்கும் போது, பரிநிஷ்ட்டித: = எங்கும் வியாபித்துக்கொண்டு (விழித்

துக்கொண்டுஇருக்கிறார், ஏஷ ஏவ = இவரே, அக்னிஹோத்ரம்ச = அக்னிஹோத்ரரூபியாகவும், அக்னிஹோத்ரிணும் = அக்னிஹோத்ரம் செய்கிறவர்களுக்கு, பலம் = பலரூபமாகவும் (பலத்தை கொடுப்பவராகவும்) ஆகிறார்.

(தா - ம்) எல்லா பிராணிகள் தூங்கும் போதுதான் எங்கும் வியாபித்துக்கொண்டு இவர் ஒருவரே விழித்துக்கொண்டிருக்கிறார். இவரே அக்னிஹோத்ரரூபியாகவும் அக்னிஹோத்ரம் செய்கிறவர்களுக்கு பலத்தையும் அளிக்கின்றார்.

தேவாஶ்ச க்ரதவஶ்சைவ க்ரதூனாம் ப்பலமேவச ।
யானி க்ருத்யானி லோகேஷு ஸர்வ ஏஷ ரவிःப்ரபுः ॥

(ப - ரை) தேவாஶ்ச = யாகதேவதைக ளாகவும், க்ரதவஶ்சைவ = ஸோமம் முதலிய யாகங்களாகவும், க்ரதூனும் = யாகங்களு டைய, பலமேவச = பலமாகவும் (ஆகிருர்), லோகேஷு = எல்லா உலகங்களில், யாநி = எந்தெந்த, க்ருத்யாநி = கார்யங்கள் (இருக் கின்றனவோ) அவைகளுக்கு, ஸர்வஃ = ஸர் வாத்மாவான, ஏஷஃ = இந்த, ரவிஃ = சூரிய பகவானே, ப்ரபுஃ = நியாமகராக (இருக் கிருர்).

(தா - ம்) முப்பத்துமூன்று யாகதேவ தைகளாவும், ஸோமயாகம்முதல் அசுவமேதம் வரையிலுள்ள யாகங்களாகவும், யாகாதிகளின் பலங்களான ஸ்வர்காதிகளாகவும், யாகங்களு க்கு சாதனமான ருத்விக், யஜமானன், ஸமித், ஆஜ்யம், பசு முதலியவைகள் யாதொன்றுண்டோ அவைகள் எல்லாவற்றிற்கும் ஸர்வாத்மாவாய் இந்த சூரியபகவானே நியாமகராயிருக்கிருர்.

இனி இந்த ஸ்தோத்திரத்தின் பலத்தை கூறுகிறார்—

ஏனமாபத்ஸு க்ருச்ரேஷு காந்தாரே
ஷு பயேஷுச।
கீர்தயன் புருஷ꞉ கஶ்சின் நாவஸீததி
ராகவ॥

(ப - ரை) ராகவ = ஓராம, கஶ்சித் = ஒரு, புருஷ꞉ = புருஷன், ஆபத்ஸு = ஆபத்துக் களிலும், க்ருச்ரேஷு = கஷ்டங்களிலும், காந்தாரேஷு = காடுகளிலும், பயேஷு ச = பயங்களிலும், ஏனம் = இந்த ஸ்தோத்தி ரத்தை, கீர்த்தயன் = கீர்த்தனம் பண்ணு வானே (அவன்), நாவஸீததி = வருத்தம டையமாட்டான்.

(தா - ம்) ஓ ராம, எவனொருவன் தனது ஆபத்துகாலத்திலும் கஷ்டகாலத்திலும், பய முண்டாகக்கூடிய இடங்களிலும், காடுகளிலும் இந்த ஆதித்யஹிருதயத்தை ஸ்துதி பண்ணுவானே கில் கொஞ்சங்கூட வருத்தமடையவேமாட்டான்.

பூஜயஸ்வைநமேகாக்ரோ தேவதேவம் ஜகத்பதிம்।
ஏதத் த்ரிகுணிதம் ஜப்த்வா யுத்தேஷு விஜயிஷ்யஸி॥

(ப - ரை) ஏகாக்ர: = ஒரேவிஷயத்தில் மனப்பற்றுதலுடையவனாய், தேவதேவம் = தேவர்களுக்கும் தேவரான, ஜகத்பதிம் = எல்லா உலகத்துக்கு ப்ரபுவான, ஏனம் = இந்த பகவானை, பூஜயஸ்வ = பூஜைசெய்வாயாக. ஏதத் = இந்த ஸ்தோத்திரத்தை, த்ரிகுணிதம் = மூன்று தடவை, ஜப்த்வா = ஜபித்து, யுத்தேஷு = யுத்தங்களில், விஜயிஷ்யஸி = ஜயிக்கப்போகிறாய்.

(தா - ம்) தேவர்களுக்கும் தேவரான எவ்வுலகத்துக்கு ப்ரபுவான இந்த பகவானை ஒரே மனங்கொண்டு பூஜிப்பாயாக. இந்த ஆதித்யஹ்ருதயஸ்தோத்திரத்தை மூன்றுதடவை, ஜபித்து யுத்தத்தில் நிச்சயமாய் ஜயத்தை அடைவாய்.

அஸ்மின் க்ஷணே மஹாபாஹோ ராவ
ணம் த்வம் வதிஷ்யஸி ।
ஏவமுக்த்வா ததாகஸ்த்யோ ஜகாம ச யதா
கதம்॥

(ப - ரை) மஹாபாஹோ = ஓ நீண்டகை யை உடையவரே, த்வம் = நீர், அஸ்மின் = இந்த, க்ஷணே = நிமிஷத்தில், ராவணம் = ராவணனை, வதிஷ்யஸி = கொல்லுவாய், ததா = அப்போதே, அகஸ்த்யঃ = அகஸ்தி யர், ஏவம் = இவ்விதம், உக்த்வா = சொல்லி, யதாகதம் = வந்தவழியே, ஜகாம = போனார்

(தா - ம்) நீண்ட புஜங்களை உடைய ஓராம, நீ இந்த நிமிஷத்திலேயே இராவணனை கொல் வாயென்று அகஸ்தியர் இவ்விதம் சொல்லிவிட்டு வந்தபடியே சென்றுவிட்டார்.

ஏதச் ச்ருத்வா மஹாதேஜா நஷ்டஶோ
கோ பவத்ததா ।

தாரயாமாஸ ஸம்ப்ரீதோ ராகவஃப்ரயதாத்
மவான் ||

(ப - ரை) ததா = அப்பொழுது, மஹா தேஜாஃ = அதிக தேஜஸ்ஸை உடைய, ராகவஃ = ராமர், ஏதத் = இவ்வார்த்தையை, ஶ்ருத்வா = கேட்டு, நஷ்டஶோகஃ = ஒழிந்த மனக்கவலை உடையவராக, அபவத் = ஆனார். ஸம்ப்ரீதஃ = மிகவும் சந்தோஷங்கொண்டு ப்ரயதாத்மவான் = தெளிவான மனமுடையவராய், தாரயாமாஸ = தரித்தார்.

(தா - ம்) அதிக தேஜஸ்வியான ஸ்ரீராமர் இவ்வார்த்தையை கேட்டதும் தனது மனக்கவலைநீங்கி மிகவும் சந்தோஷங்கொண்டு மிகவும் பக்தியுடன் இதை தரித்தார்.

ஆதித்யம் ப்ரேக்ஷ்ய ஜப்த்வா த்ரிஃ பரம்
ஹர்ஷமவாப்தவான் |
த்ரிராசம்ய ஶுசிர் பூத்வா தனுராதாய
வீர்யவான் ||

(ப - ரை) வீர்யவான் = மிக பராக்கிரமமுடைய (ராமர்), த்ரிঃ = மூன்றுதடவை, ஆசம்ய = ஆசமனஞ்செய்து, ஶுசிர் = பரிசுத்தராக, பூத்வா = ஆகி, ஆதித்யம் = சூரியனே, ப்ரேக்ஷ்ய = பார்த்து, த்ரிঃ = மூன்று தடவை, ஜப்த்வா = ஜபித்து, தனுঃ = வில்லை, ஆதாய = எடுத்து, பரம் = மிகவும், ஹர்ஷம் = சந்தோஷத்தை, அவாப்தவான் = அடைந்தார்.

(தா - ம்) மிகபராக்கிரமசாலியாகிய ஸ்ரீராமர் மூன்றுதடவை ஆசமனம் செய்து பரிசுத்தராகி சூரியனே பார்த்து ஆதித்யஹ்ருதயத்தை மூன்று தடவை ஜபித்து பராக்கிரமம் விருத்தி அடைந்து தான் வில்லை எடுத்து மறுபடியும் யுத்தம் செய்ய மிகவும் சந்தோஷமடைந்தார்.

ராவணம் ப்ரேக்ஷ்ய ஹ்ருஷ்டாத்மா யுத்
தாய ஸமுபாகமத்।

ஸர்வயத்னேந மஹதா வதே தஸ்ய த்ரு
தோ பவத் ||

(ப - ரை) ராவணம் = ராவணனை, ப்ரே
க்ஷ்ய= பார்த்து, ஹ்ருஷ்டாத்மா = சந்தோ
ஷங்கொண்ட மனமுடையவராய், யுத்தாய
=யுத்தத்தின் பொருட்டு, ஸமுபாகமத் = கிட்
டேநெருங்கினர். மஹதா = மிகுந்த, ஸர்வ
யத்னேந = எல்லாவித முயற்சியால், தஸ்ய
= அந்த இராவணனுடைய, வதே = சம்ஹா
ரத்தில், த்ருதஃ = நிச்சயங் கொண்டவராக
அபவத் = ஆனர்.

(தா - ம்) ஸ்ரீராமர் ராவணனை பார்த்து
மிகவும் சந்தோஷமடைந்து யுத்தம் செய்வதற்
காக கிட்டே நெருங்கினர். மிகுந்த முயற்சி
யால் இராவணனை சம்ஹரிப்பதிலேயே மிகவும்
நோக்கமுள்ளவரா யிருந்தார்.

அத ரவிரவதந் நிரீக்ஷ்ய ராமம்
முதிதமனாः பரமம் ப்ரஹ்ருஷ்யமாணः।
நிஶிசரபதி ஸம்க்ஷயம் விதித்வா
ஸுரகணமத்யகதோ வசஸ் த்வரேதி ॥

(ப - ரை) *அத = பிறகு, ரவிः = சூரியன், ராமம் = ராமரை, நிரீக்ஷ்ய = பார்த்து, முதிதமனாः = சந்தோஷங்கொண்ட மனமுடையவராய், பரமம் = மிகவும், ப்ரஹ்ருஷ்யமாணः = களிப்புற்று, நிஶிசரபதிஸம்க்ஷயம் = ராக்ஷஸாதிபதியான ராவணனை ஸம்ஹரிப்பதை, விதித்வா = தெரிவித்து (அனுக்ரஹித்து), ஸுரகணமத்யகதः = தேவகணங்களின் நடுவில் இருந்துகொண்டு, த்வர = (ராவண வதத்தைக் குறித்து) துரிதப்படும், இதி = என்ற, வசः = வார்த்தையை, அப்ரவீத் = சொன்னார்.*

(தா - ம்) பிறகு ஸூரியபகவான் மிகவும் சந்தோஷங்கொண்டு யுத்தத்தை பார்க்க தனது மண்டலத்திலிருந்து இறங்கி ராமருடைய சமீபத்தில் தேவகணங்களின் நடுவிலிருந்துகொண்டு ராவணனின் ஸம்ஹாரத்தை அனுக்ரஹித்து ராவணவதத்தைப்பற்றி த்வரைப்படுமென்ற வார்த்தையை சொன்னார்.

ஸ்ரீமத்வால்மீகி ராமாயணத்தில் யுத்த காண்டத்தில் நூற்றேழாவது சர்க்கத்திலுள்ளது ஆதித்யஹ்ருதயம்

முற்றிற்று.



# எமது சொந்த தமிழ் பிரசுரங்கள்.

## தமிழில்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | யஜுர்வேத ஸந்தியா வந்தனம், யஜ்ஞோபவீததாரணம், அமாவாசை தர்ப்பணம், ப்ரும்மயக்ஞம், பரிசேஷண மந்திரம், சமிதாதானம் முதலியன (ஐந்தாம் பதிப்பு) | 0 | 2 | 0 |
| 2. | ருக்வேத ஸந்தியாவந்தனம், அமாதர்ப்பண முதலிய (நான்காம் பதிப்பு) | 0 | 2 | 0 |
| 3. | காளிதாஸ் விரசிதம், ஶ்யாமளா தண்டகம் ஸரஸ்வதி ஸ்தோத்ரம் (நான்காம் பதிப்பு) | 0 | 1 | 0 |
| 4. | ஸ்ரீ விஷ்ணு ஸகஸ்ர நாமாவளி | 0 | 3 | 0 |
| 5. | ஸாமவேத ஸந்தியாவந்தனம், தர்ப்பணம் முதலியன அடங்கியது (மூன்றாம் பதிப்பு) | 0 | 2 | 6 |
| 6. | ஸ்தோத்ரமாலா அல்லது ஸ்துதி மஞ்சரி உயர்ந்த கிளேஸ் காகிதத்தில் எல்லா தேவதைகளின் பேரிலும் சுமார் 25 ஸ்தோத்திரங்கள் அடங்கியது (நான்காம் பதிப்பு) | 0 | 3 | 0 |

7. கல்பத்ரயம், பிள்ளையார் சதுர்த்தி, வரலக்ஷ்மி நோன்பு, ஸரஸ்வதி பூஜை முதலிய (நான்காம் பதிப்பு) 0 4 0

8. ஸ்ரீ விஷ்ணுஸகஸ்ரநாமம்-த்வாதசநாம பஞ்சரம், ஸகஸ்ரநாமம், ஸகஸ்ரநாமாவளி, கிருஷ்ண அஷ்டோத்ரம், அஷ்டோத்ர நாமாவளி, ராம அஷ்டோத்ரம், வெங்கடேச அஷ்டோத்ரம் முதலியன அடங்கியது (நான்காம் பதிப்பு) கிளேஸ் பேபர் 0 4 0

ஷை ரப் பேபர். 0 6 0

9. ஸ்ரீசுப்ரமண்ய ஸ்தோத்ரம்-புஜங்க ஸ்தோத்ரம், அஷ்டோத்ரம், அஷ்டோத்ர நாமாவளி, ஷண்முக அஷ்டாவிம்சதி, நாமாவளி அடங்கியது 0 2 0

10. ஸ்ரீ லக்ஷ்மீ ஸஹஸ்ரநாமம் - இதில் லக்ஷ்மீ ஸஹஸ்ரநாமம், ஸஹஸ்ரநாமாவளி, அஷ்டோத்ர ஸதநாம ஸ்தோத்ரம், நாமாவளி, லக்ஷ்மீ அஷ்டகம், லக்ஷ்மீ ஸ்தோத்ரம், அன்னபூர்ணாஷ்டகம் முதலியன இருக்கின்றன 0 6 0

11. ஸ்ரீலலிதா ஸகஸ்ரநாமம் (ஸ்ரீ ராஜராஜேஸ்வரி படத்துடன்) ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம், ஸஹஸ்ர நாமாவளி, அஷ்டோத்ர ஸ்தோத்ரம், நாமாவளி, ராஜராஜேஸ்வரி அஷ்டகம், திரிபுர ஸுந்தரி ஸ்தோத்ரம் முதலியன அடங்கியது (மூன்றாம் பதிப்பு) 0 6 0

12. ஸ்ரீ சுப்ரமண்ய பூஜாவிதி (ஷண்முகன் படத்துடன்) இதில் மாக கணபதி பூஜை, ஸங்கல்பம், கலச பூஜை முதலியன அஷ்டோத்ர சத நாமாவளி, ஷோடசநாம ஸ்தோத்ரம், நாமாவளி, கவச ஸ்தோத்ரம் முதலிய விஷயங்கள் உள. 0 3 0

13. புருஷ ஸூக்தம், ஸ்ரீ ஸூக்தம், பூஸூக்தம், துர்க்கா ஸூக்தம், ஶாந்தி பஞ்சகம், ருத்ரகவசம். (2-ம் பதிப்பு) 0 2 0

14. இந்திராக்ஷி சிவகவச ஸ்தோத்ரம் 0 2 0

16. ஸௌந்தர்ய லஹரி - ஆதிசங்கரர் அம்பாள் பேரில் இயற்றிய 100 சுலோகங்கள் 0 2 0

17. பஜ கோவிந்தம் கோபிகாகீதை (இரண்டாம் பதிப்பு) 0 1 0

18. ஸ்ரீஸுப்ரமண்ய ஸகஸ்ரநாமம் - இதில் ஸகஸ்ரநாமம், ஸஹஸ்ர நாமாவளி, அஷ்டோத்ரம், மூல மந்திரஷ்டகம், பஞ்சரத்னம் முதலியன 0 6 0

19. ஸ்ரீ லஷ்மி அஷ்டோத்ரஸ்தோத்ரம் பதவுரை பொழிப்புரையுடனும், நாமவளி, அஷ்டகம் முதலியனவும் கூடியது. (சிரோன்மணி விஸ்வநாத சாஸ்திரிகள் எழுதியது) 0 2 0

20. சிவானந்த லஹரி ஸ்ரீ ஆதிசங்கரர் பரமசிவன்பேரில் இயற்றியது 0 2 0

21. யஜுர்உபாகர்மம் 0 2 0

22. நவக்ரஹ ஸ்தோத்ரம் 0 2 6

23. பூஜாராமாயணம் நாமராமாயணம் 0 1 0

24. அகிலாண்டேச்வரி அக்ஷரமாலிகா 0 1 6

25. யஜுஸ் ஸந்தியா பாஷ்யம் 0 5 0

26. சங்கராந்தி பூஜை கோபூஜை 0 2 0

ஜெனரல் டிரேடிங் கம்பேனி

திருவல்லிக்கேணி, மதராஸ்.

## தமிழ்பாட்டுப் புத்தகங்கள்.

| | அ. | பை. |
|---|---|---|
| லலிதாம்பாள் சோபானம் ... | 5 | 0 |
| பார்வதி அம்மன் ஷை ... | 5 | 0 |
| வால்மீகி ராமாயணப் பாட்டு ... | 5 | 0 |
| குசலவாக்யம் ... | 5 | 0 |
| தினசரி ஸ்தோத்திரம் ... | 4 | 6 |
| ஜீவநாடகம் ... | 4 | 6 |
| அனந்தங்காடு ... | 2 | 6 |
| குறவஞ்சி ... | 3 | 0 |
| ஸாவித்ரி பாடம் ... | 2 | 0 |
| ருக்மணிகல்யாணம் ... | 5 | 0 |
| கோதைபரிணயக்கும்மி ... | 3 | 0 |
| கண்ணன் லீலை காக்ஷியோடக்கும்மி ... | 3 | 6 |
| காமாக்ஷி திருப்புகழ் ... | 8 | 0 |

எல்லாவித தமிழ் நாவல்களும் நாகர கிரந்த புத்தகங்களும் எங்களிடம் கிடைக்கும்.

பி. டி. பாணி கம்பெனி,
திருவல்லிக்கேணி—மதறாஸ்.

H. P. Press, Madras.